நாட்டுக்காக கஷ்டப்பட்டார்கள். வேலைக்காக கஷ்டப்படுகிறார்கள். அங்கு அந்நியம் கொள்ளையடிக்க கஷ்டப்படவில்லை. இங்கு அன்னியர் 150 கோடி டாலர் கொள்ளையடிக்க கஷ்டப்படுகிறார்கள். சுரண்டலுக்கு தலைது உழைப்பை பலியிட வேண்டுமென்று. காத்தால் உழைப்போருக்கும் கருத்தால் உழைப்போருக்கும் உள்ள வித்தியாசம் மறைந்து வருகிறது.

<u>முன்பக்கத் தேவை:</u> நிவாரணம்; நிலச்சுவான்தார் முறையை ஒழித்து உழுபவனுக்கே நிலம் கிடைக்கும்படி செய்வது; தொழில் வியாபாரம் விவசாயம் வளர்ச்சியுறச் செய்வது; மக்களுக்கு உணவு, உடை கிடைக்கும்படி செய்வது; உபரி உணவு தானியத்தை சேகரித்து நெருக்கடி நேரத்தில் அவை வழங்குவது; பற்றாக்குறை இடங்களுக்கு உதவி செய்வது; கட்டுப்பாடுகள் இருக்கும் வரை வெற்றிகரமாகச் செய்வது; மக்களுக்கு இலவச வைத்திய வசதியும் செய்வது; படிப்படியாக கட்டாய ஆரம்பக் கல்வி போதிப்பது; செகண்டரி படிப்பு குறைந்த செலவில் கிடைக்கும்படி செய்வது; ஜாதிக் கொடுமையை ஒழிப்பது; ஸ்திரீகளுக்கு ஆண்களுடன் சமமான பொருளாதாரத் தகுதியை அளிப்பது; மக்கள் ஒத்துழைப்புப் பெற்ற ராஜ்யத்தின் நிர்வாகத் தேவையை ஏற்படுத்துவது; கள்ளமார்க்கெட், லஞ்சம் இவைகளை ஒழிப்பது; கேரளா, தமிழ்நாடு, ஆந்திரா, கன்னடம் மாகாணங்கள் ஏற்படுத்துவது; ஒரு நியாயமான நோக்கத்துடன் எவ்வாறும் இணைக்கப்படாத வியாபாரக் கொள்கையை அமுலாக்கும்படி இந்திய சர்க்காரை வற்புறுத்துவது; சுதந்திரமாக எல்லா நாடுகளுடன் வியாபாரம் செய்வது; எந்த அந்நிய நாட்டுக்கும் நமது சாதனங்களையும் வசதிகளையும் ஒப்படைக்காமல் இருப்பது.

<u>மேற்கண்டவைகளை அடைவதற்கு</u>: ஜனநாயக உரிமைகள்: தடையின்றி அரசியல் கட்சிகள் நடத்த செய்வது; அரசியல் கைதிகள் மீது உள்ள வாரண்டுகளை ரத்து செய்வது; விசாரணையின்றி ராஜ்ய சர்க்காரால் ஒருவரும் சிறை வைக்கப்படக்கூடாது; பத்திரிகை, பேச்சு சுதந்திரம், ஆயுதமின்றி சமாதானமாகக் கூட சுதந்திரம், அரசியல் கட்சிகளின் ஸ்தாபனங்கள் மீது தடை போடக்கூடாது.

<u>விவசாய சீர்திருத்தம்</u>:- 1947ம் வருஷத்திலிருந்து ஜமீன்தார்கள் இனாம்தார்கள் மற்றும் பெரிய நிலச்சுவான்தார்கள் ஆகியோரால் சட்டவிரோதமாயும் பலாத்காரமாயும் ஆக்கிரமிக்கப்பட்டுள்ள நிலங்களை மீட்டுக் கொடுப்பது; நியாயமாக அவற்றை சாகுபடி செய்து வந்தவர்களுக்கு நஷ்டம் எதுவும் ஏற்படாமல் அவர்களை (வெளியேற்றப்பட்டவர்கள்) கொடுக்கப்பட்ட பட்டாக்களை ரத்து செய்வது. நியாயமற்ற முறையில் தெலுங்கானாவிலிருந்து ஜமீன்தார்களிடமிருந்து எடுத்துக் கொள்ளப்பட்ட நிலங்களை ஆதி அல்லது ஏழை விவசாயிகளுக்கு மீட்டுக் கொடுத்து அரசியல் தியாகிகள் உட்பட மற்றவர்களுக்கு பொருத்தமான நிலம் பங்கிட்டுக் கொடுப்பது; அரசியல் தியாகிகளுக்கு மேற்கொண்டு நிலம் எதுவும் அளிக்கப்படமாட்டாது.

<u>உணவுப் பிரச்னை</u>: ராஜ்யத்தின் உணவுப் பற்றாக்குறையைச் சமாளிக்க எல்லா ஜில்லாக்களுக்கும் போதுமான உணவு தானியங்களை இறக்குமதி செய்ய